# நமது கலாசாரத்திற்கு நெருக்கடி

காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

உலகத்தில் முன்னேற்றமடைந்துள்ள தாகச் சொல்லப்படும் நாடுகளில் வசிக்கும் ஜனங்களுடைய வாழ்க்கைத் தரத்துக்குச் சமதையாக நமது நாட்டு ஜனங்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த வேண்டும். அதாவது அவர்களுடைய அன்றாட வாழ்க்கையில் சுக சௌகரியங்களை அதிகரிக்கச் செய்ய வேண்டும் என்ற நோக்கத்துடன் இப்பொழுது நமது நாட்டில் தீவிரமான முயற்சிகள் செய்யப்பெற்று வருகின்றன. இந்த நோக்கத்தையும், முயற்சிகளையும் பாராட்ட வேண்டியதுதான். ஆனால் ஓரளவுக்குட்பட்டுத்தான் பாராட்ட வேண்டியிருக்கிறது. ஏனென்றால், இந்த நோக்கத்தை நிறைவேற்றுகின்ற முறையில் முயற்சிகள் செய்கிறபோது, வாழ்க்கையின் லட்சியத்தையும், வாழ்க்கையின் பிரயோஜனங்களையும் நாம் புறக்கணித்து விடக்கூடாது. அவைகளை அறிந்து செயல் படுத்துவது தான் உண்மையான வாழ்க்கை.

ஆனால் சமீப காலமாக, இந்த உண்மையான வாழ்க்கையைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமென்பதிலும், இந்த உண்மையான வாழ்க்கையைப் பின்பற்ற வேண்டுமென்பதிலும் நியாயமாக இருக்க வேண்டிய ஆவல் மிகவும் குறைந்து காணப்படுகிறது. சிறப்பாக நமக்கு சுயராஜ்யம் கிடைத்தப்பிறகு, அதிலும் சென்ற பதினைந்து வருஷங்களாக இந்த ஆவல் வேகமாகக் குறைந்து வருகிறது. இது மிகவும் வருத்தப் படவேண்டிய விஷயம். இந்த நிலைமை நாம் அந்நியர் ஆட்சிக்குட்பட்டிருந்தபோது ஏற்படவில்லை.

முஸ்லிம்கள் நமது நாட்டின் மீது படை யெடுத்துவந்து வெற்றி கொண்ட காலத்தில் நமது கலாசாரத்திற்கும் மதத்திற்கும் ஏற்பட்ட அதிர்ச்சி, அதிலும் கூட வடநாட்டில் ஏற்பட்ட அதிர்ச்சி மிகக் கடுமையானது தான். ஆனால் அந்த அதிர்ச்சியை நாம் தாங்கிக் கொண்டோம். அதனால் நமது மத நம்பிக்கைகளுக்கோ, ஆசார அனுஷ்டானங்களுக்கோ, நமது கலாசார மரபுக்கோ அதிகமான ஊனம் ஏற்படவில்லை. முஸ்லிம்களின் படையெடுப்பினால், நமது கிராமங்களுக்கு எவ்வித பாதகமும் உண்டாகவில்லை. அது போலவே சுமார் முந்நூறு வருஷ பிரிட்டிஷ் ஆட்சியிலும், நமது மதக் கோட்பாடுகளும் வாழ்க்கை முறைகளும் பாதிக்கப் படவில்லை. ஜனங்களுடைய மத சம்பந்தமான விவகாரங்களில் தலையிடாமல் அவர்கள் - பிரிட்டிஷார் - நடுநிலைமை வகித்து, நமது கொள்கைகளுக்கும் ஆசார அனுஷ்டானங்களுக்கும் மதிப்புக் கொடுத்துக் காப்பாற்றி வந்தார்கள்.

நாம் சுயராஜ்யம் பெற்ற பிறகு, நம்முடைய வாழ்க்கை முறைகள் பெரிதும் மாறுதலடைந்து விட்டன. நமது சன்மார்க்க வாழ்க்கையில் இதற்கு முந்தி இல்லாத அளவுக்குக் கறைபடிந்து வருகிறது. நம்முடைய பாரமார்த்திக வாழ்க்கையைப்பற்றி

முந்தியெல்லாம் நாம் பெருமைப்பட்டுக் கொண்டிருந்தோம். ஆனால் இப்பொழுது அது பழைய கதையாகிவிட்டது. நம்முடைய கலாசார பரம்பரைக்கும், வாழ்க்கையின் லட்சியங்களுக்கும் விடை கொடுத்து விட்டோம். லௌகிக பரமான அனுகூலங்களையுடைய அதாவது பணம், பதவி, அதிகாரம் ஆகியவைகளை அடையவேண்டும் என்ற மோகத்தில், பாரமார்த்திக சம்பந்தமான விஷயங்களில் அலட்சிய மனப்பான்மை காட்டுகிறோம். சீலந்தான் பெரிதெனக் கருதவேண்டியதற்குப் பதில் இன்ப நுகர்ச்சியில் ஈடுபடுகிறோம். மத சம்பந்தமான விஷயங்களில், சிலர் அசிரத்தை உடையவர்களாயிருக்கிறார்கள்; அல்லது கடவுளை ஏற்கவோ மறுக்கவோ முடியாதென்ற கொள்கையுடையவர்களாயிருக்கிறார்கள். நம்மிலே அனேகர் ஏதோ ஒரு பிரதிப் பிரயோ ஜனத்தைக் கருதி மத சம்பந்தமான சடங்குகளைச் செய்கிறார்கள்.

நமது முன்னோர்களைக் காட்டிலும் நாம் மிகவும் நாகரிக முடையவர்களென்று பெருமைப்பட்டுக் கொள்கிறோம். நமது வாழ்க்கைத் தரம் உயர்ந்திருக்கிறதென்று சொல்லிச் சந்தோஷப்படுகிறோம். இந்தத் தரத்தை எப்படிக் கணிக்கிறோமென்றால், ஆகாய விமானங்கள். மோட்டார். வாகனங்கள், டெரிலின், நைலான் துணிகள், டிரான்சிஸ்டர்கள், டெலிவிஷன் இப்படி நவீனமானவற்றைக் கொண்டு கணிக்கிறோம். எளிய வாழ்க்கையினால் ஏற்படக்கூடிய நன்மைகளை நாம் மறந்தே விட்டோம். யந்திரம் போல் நடத்துகிற வாழ்க்கையின் விளைவாக. உண்மையான வாழ்க்கையினால் ஏற்படக் கூடிய சந்தோஷத்தைத் துறந்து விட்டோம். நம்மிலே ஏழைகள் கூட பணக்காரர்களைப் பார்த்துப் பொறாமை கொள்கிறார்கள். அவர்களுடைய பழக்க வழக்கங்களைப் பின் பற்றப் பார்க்கிறார்கள். நமது வாழ்க்கையில் எளிமைக்குப் பதில் பகட்டே முக்கியத்துவம் பெற்றிருக்கிறது. பணக்காரர்கள் ஆடம்பர வாழ்க்கை நடத்துவதன் மூலமாகவும், தங்கள் செல்வச் செழுமையை வெளிப்படையாகக் காட்டிக்கொள்வதன் மூலமாகவும் ஏழைகளுக்குக் கெட்ட வழியைக் காட்டுகிறவர்களா யிருக்கிறார்கள்.

எளிய வாழ்க்கையைத் துறந்து விட்டோமென்றால்; உயர்ந்த சிந்தனையையும் துறந்து விட்டோம். இப்பொழுது வெளியாகும் பெரும்பாலான நூல்கள், இளைஞர்களை துன்மார்க்கத்தில் இழுத்துச் செல்லக் கூடியனவாகவும், இந்திரிய சுகங்களில் ஈடுபடச் செய்யக் கூடியனவாகவும் இருக்கின்றன. தற்கால இளைஞர்களுக்கு, உயர்ந்த சிந்தனைகளைத் தூண்டி விடக்கூடிய இலக்கியங்கள் பயனற்றவை என்று தோன்றுகின்றன. வியாசர், வால்மீகி, காளிதாஸன் போன்ற மகா கவிகளின் படைப்புக்களில் அவர்களுக்கு ருசி இல்லை. பொழுது போக்குவதற்காக நடைபெறுகின்ற சினிமா போன்றவை அவர்களுடைய மனத்தைக் கறைபடுத்தி விடுகின்றன. அதிலும் கல்லூரிகளில் படிக்கும் மாணவிகளும், மற்ற இளம் பெண்களும் கீழ்த்தரமான சினிமாக்களைக் கண்டு களிப்படைவதன் மூலம் இளைஞர்களின் மனம் இன்னும அதிகமாகக் கறைபட்டுப் போகிறது.

தவிர, கிராமங்களிலுள்ளவர்கள், நகரங்களுக்கு வந்து குடியேறுவது அதிகமாகிக் கொண்டு வருகிறது. இதனால் கிராம வாழ்க்கையில் கிடைக்கக்கூடிய

அமைதி போய் நகர வாழ்க்கையில் கிடைக்கக்கூடிய சிக்கல்களும் போட்டா போட்டி மனப்பான்மையும் அதிகரித்துக்கொண்டு வருகின்றன. அமைதியான கிராம வாழ்க்கையில் அனுபவிக்கக் கூடிய சநதோஷத்தை ஜனங்கள் இழந்துவிட்டார்கள்.

அரசியல் விவகாரங்களில் அறிவுக்கும் நேர்மைக்கும் எடுத்துக்காட்டுப் போல இருந்த மந்திரிமார்களின் துணை கொண்டு, பிரஜைகளின் நலனில் எப்பொழுதும் விருப்புடனிருந்து வந்ததும், நெடுங்காலமாக நடை பெற்று வந்ததுமான மன்னராட்சி முறை மறைந்து விட்டது. வால்மீகி முனிவர், ராம ராஜ்யத்தைப்பற்றி அழகாக வருணித்திருக்கிறார். அத்தகைய ராமராஜ்யம், நமது நாட்டில் ஏற்பட வேண்டுமென்று மகாத்மா காந்தி வெகுவாக ஆசைப்பட்டார். ஆனால் அந்த ஆசை அவருடைய மரணத்தோடு முற்றுப்பெற்றுவிட்டது. இப்பொழுது ஜன நாயக ஆட்சி நடைபெற்று வருகிறது. இது செயல்படுகிற வகையில் தேர்தல்கள் நடைபெறுகின்றன. ஒவ்வொரு தேர்தலின் போது, மிகவும் விபரீதமான முறையில் ஒழுக்கம். நேர்மை முதலியவை சீர்குலைந்து வருகின்றன. திருதராஷ்டிரன் சபையில் துரோபதை "வான் சபையில் கேள்வி பலவுடையோர், கேடிலா நல்லிசையோர், மேலோர் இருக்கின்றார். அவர்கள் தர்ம நியாயத்தை எடுத்துச் சொல்லாமலிருக்கின்றரே" என்று கதறியழுத குரல் நம்மில்
யாருடைய காதிலும் விழவில்லை போலும்.

நமது கலாசாரத்தையும், சீலத்தையும் பேணிப் பாதுகாத்து வருகின்றவை இரண்டு. ஒன்று. வீடு; மற்றொன்று, கல்விக்கூடம். இவ்விரண்டும் இப்பொழுது சீர்திருத்த முடியாத அளவுக்கு சீர்குலைந்து போயிருக்கின்றன. நமது நாட்டில் எப்பொழுதுமே, சமுதாயத்தின் ஓர் அங்கமாகக் குடும்பம் இருந்து வந்திருக்கிறது. வயதிற்கும் அனுபவத்திற்கும் முக்கியத்துவம் கொடுத்து நடைபெற்றுவந்த அவிபக்த குடும்பம் இப்போது அடியோடு இல்லாமற் போய் விட்டது. வயதானவர்களுக்கும், வறுமை நிலையிலள்ளவர்களுக்கும், பலவீனர்களுக்கும் பாதுகாப்பளித்து வந்த ஸ்தாபனமாக அவி பக்த குடும்பம் இருந்து வந்தது. வயிற்றுப் பிழைப்பு நிமித்தம் தொலை தூரம் சென்று வேலை வாய்ப்புக்களை பெறவேண்டிய நிலை ஏற்பட்டதன் விளைவாக, இந்த அவிபக்த குடும்பமுறை சின்னாபின்னப்பட்டுப் போய் விட்டது. இதனால் குடும்பத்தைச் சேர்ந்த ஒவ்வொருவருக்கும் நமக்கு நாமே என்ற உணர்ச்சி ஏற்பட்டு விட்டது. குலாசாரத்தை அனுஷ்டிப்பதனால் ஏற்படக்கூடிய நன்மைகளை அறியாதவர்களாகவும் அல்லது அதனை அலட்சியம் செய்கிறவர்களாகவும் பலர் இருக்கின்றனர்.

கல்வித் துறையில் குரு - சிஷ்ய உறவு என்பது போய்விட்டது. சிஷ்யன் என்று சொன்னால். ஒழுங்குக்கு உட்படுத்தப்பட வேண்டியவன் என்று பொருள். சிஷ்யன் பணிவோடு இருக்கிறவன் என்ற பொருளில் விதேயன் என்று அழைக்கப்படுகிறான். இந்த இரண்டு சொற்களும் அதாவது சிஷ்யன், விதேயன் என்ற இரண்டு சொற்களும் தற்காலக் கல்வி முறையில் அர்த்தமில்லாமற் போய்விட்டன. குரு பக்தி செலுத்துவாருமில்லை; அதனை ஏற்றுக் கொள்ளத் தகுதி படைத்தவருமில்லை.

இந்த மாதிரியான விஷயங்களில், நமது முன்னோர்கள் கடைப்பிடித்துவந்த நியதிகள் பலவும் இப்பொழுது சீரழிந்து போயிருக்கின்றன. நம்மில் பலருக்கும் மன அமைதியும், அதனால் ஏற்படக்கூடிய சந்தோஷமும் இல்லாமற் போய்விட்டன. இந்த ஜட உலகத்தைச் சேர்ந்த பொருள்கள் எதுவும் மனிதனுக்கு மன அமைதியையோ சந்தோஷத்தையோ கொடுக்காது என்ற வாசகத்தின் பொருளை நாம் மறந்து விட்டோம்.

நமது முன்னோர்கள் லௌகிக சம்பந்தமான விஷயங்களைப் புறக்கணித்து வந்தார்கள் என்று நாம் கருதிவிடக்கூடாது. உண்மையில் இந்த மாதிரியான விஷயங்களின் அவசியத்தைப்பற்றி அதிகம் சொல்லி இருக்கிறார்கள். தர்மம் அர்த்தம், காமம், மோட்சம் என்ற சதுர்வித புருஷார்த்தங்களை அடைய வேண்டியதே மனிதர்களுடைய லட்சியமாயிருக்க வேண்டுமென்பது குறித்துப்பல விதமாகச் சொல்லியிருக்கிறார்கள்.

நம்மிலே ஒரு சிலரைக் தவி. பெரும்பாலோர் இல்லறம் நடத்துகிறவர்கள். ஒரு சமுதாயம் ஒழுங்காக இயங்கிவர வேண்டுமானால், இல்லற வாழ்க்கையிலுள்ளவர்கள் பொருளையும் இன்பத்தையும் நாட வேண்டுமென்று வலியுறுத்தப்பட்டிருக்கிறது. ஆனால் இந்த இரண்டையும் - பொருளையும் இன்பத்தையும் தர்மத்திற்குட்மட்டும். மோட்தைக் குறிக்கோளாகக் கொண்டு அடைய வேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. தற்கால சமுதாய வாழ்க்கையில் ஏற்பட்டிருக்கிற தீமைகளுக்கெல்லாம் அடிப்படைக் காரணம், நாம் தர்மத்தைப் புறக்கணித்து விட்டு, பொருளையும் இன்பத்தையும் நாடுவதுதான்.

தர்மம் எது? அதர்மம் எது? என்பதை மனிதர்கள் வகுக்கும் சட்ட திட்டங்களைக் கொண்டு நாம் நிர்ணயிக்கக்கூடாது. இது பற்றி சாஸ்திரங்கள் என்ன சொல்லியிருக்கின்றன என்பதைத் தெரிந்துகொண்டு அதன்படி அனுசரிக்க வேண்டும். செய்யத் தகுத்தது எது? செய்யத்தகாதது எது? என்பதை நிச்சயிக்க, சாஸ்திரம் நமக்குப் பிரமாணமாகிறது. "சாஸ்திரம் ஆக்ஞாபித்திருப்பதை அறிந்து தர்மத்தை செய்யக் கடவாய்" என்பது கீதாவாசகம். ஆனால் தற்காலத்தில் சாஸ்திரங்களை நிராகரித்து விட்டு, சமயோ சிதப்படியும், அவரவர் விருப்பங்களுக்கேற்றாற் போலவும் நடப்பது சர்வசாதாரணமாகி விட்டது.

தர்மத்தின் அடிப்படைத் தத்துவம் உலகனைத்திற்கும் பொதுவானது. ஆனால் அதனை அனுஷ்டிப்பது ஒரே மாதிரியாயிருக்க முடியாது. எல்லா தர்மங்களும் ஒவ்வொருவருக்கும் பொருந்தும் என்று சொல்ல முடியாது. அவரவருடைய தகுதிக்கும், நிலைமைக்கும் ஏற்றாற்போல் தர்மம் அனுஷ்டிக்கப்பட வேண்டுமென்று நமது முன்னோர்கள் நிர்ணயித்து விட்டிருக்கிறார்கள். யதது விட்டிருக்கிறார்கள். உதாரணமாக ஆசிரியனுடைய தர்மம் வேறு; மாணாக்கனுடைய தர்மம் வேறு. கணவனுடைய தர்மம் வேறு; மனைவியினுடைய தர்மம் வேறு. எஜமானனுடைய தர்மம் வேறு; வேலைக்காரனுடைய தர்மம் வேறு என்றிப்படி. இவர்களெல்லோரும் சமம் என்று சொல்லிக் கொண்டு ஒருவர் தர்மத்தை மற்றொருவர் அனுஷ்டிக்கக்

கூடாது. உதாரணமாக ஒரு ஸ்திரீ, ஒரு புருஷன் செய்கிற காரியத்தை நானும் செய்யக் கூடும் என்று சொல்லலாம். ஆனால் அப்படிச் செய்வது அவள் தர்மமன்று. அப்படிச் செய்வதால் அவளுக்கு இயற்கையாகவுள்ள அழகு, மகத்துவம் ஆகியவை குன்றிப் போகும். யார் யார் எந்தெந்த தர்மத்திற்கு அதிகாரிகள் என்பதைத் தெரிந்துகொள்கிற விஷயத்தில் நமக்கு ஏற்பட்டிருக்கிற குழப்பம், எந்த தர்மத்தை அனுஷ்டிக்க நமக்கு உரிமையும் தகுதியும் இல்லையோ அந்த தர்மத்தை அனுஷ்டிப்பது, இப்படிப் பட்டவைதான் இப்பொழுதேற்பட்டிருக்கிற சண்டை சச்சரவுகளுக்கெல்லாம் காரணம். “ஸ்வதர்மத்தில் இறப்பது மேல். பிறர் தர்மம் பயன் தருவதாகும்" என்பது கீதா வாசகம்.

ஒருவன் கட்டாயம் செய்தாக வேண்டிய தர்மங்களைப்போல், மற்றொருவன் செய்ய வேண்டிய கடமைகள் இருக்கமாட்டா. ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லை. ஸ்வதர்மத்தைச் செய்ய வேண்டியது தான் ஒருவனுக்கு முக்கியமே தவிர, மற்றொருவன் செய்யவேண்டிய தர்மத்தைப் பொறுத்ததாக இருக்கக்கூடாது. அதுபோல ஒருவன், மற்றொருவனுடைய கடமைகளைச் செய்வதாகச் சொல்லிக்கொண்டு, தான் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்யாமல் விட்டு விடக் கூடாது. பிறர் செய்ய வேண்டிய கடமைகளைப் பற்றிக் கருதாமல், தன் கடமையை ஒவ்வொருவனும் செய்து கொண்டு போக வேண்டும். ஒரு கணவன் தன் மனைவி விஷயத்தில் தன் மனைவி விஷயத்தில் செய்யவேண்டிய கடமையைச் செய்யாமல் விட்டு விட்டிருக்கலாம். அதற்காக மனைவி தன் கணவனுக்குச் செய்யவேண்டிய கடமைகளில் தவறக் கூடாது. இப்பொழுதெல்லாம், செய்ய வேண்டிய கடமைகளைச் செய்யாமல், பெற வேண்டிய உரிமைகளைப் பற்றி மட்டும் அதிகம் பேசப்படுகிறது. இப்படிப் பேசாமல் அவரவரும் அவரவர் கடமைகளைச் கொண்டு போனால் சமுதாயத்தில் ஏற்பட்டு வருகிற பூசல்கள் தாமாகவே மறைந்து போகும்.

பெதுவாகச் சொல்லப்போனால், இப்பொழுது நாம் நல்வாழ்கை நடத்த வேண்டுமென்று ஆசைப்படுகிற பழக்கத்தை இழந்து விட்டோம். கட்டுப்பாடு என்பது போய் விட்டது. அதற்குப் பதில், எதற்கும் இணங்கிக் கொடுத்துக்கொண்டு போகிற சுபாவம் நமக்கு ஏற்பட்டு விட்டிருக்கிறது.

நமது அன்றாட வாழ்க்கையில் ஆடம்பரம் புகுந்துகொண்டு எளிமையை அப்புறப் படுத்திவிட்டது. அழிவில்லாத ஆத்மா நமக்கு இருக்கிறது. அதன் வளர்ச்சிக்கு நாம் பாடுபட வேண்டும் என்ற எண்ணம் நம்மிடமிருந்து அகன்று விட்டது. அதற்குப் பதில், அழிந்து போகக்கூடிய உடம்பைக் திருப்தி செய்வதைப்பற்றி எப்பொழுதும் எண்ணமிட்டுக் கொண்டிருக்கிறோம்.

மனத்தையும் சன்மார்க்க வாழ்க்கையையும் ஒழுங்குபடுத்துவதே தபஸ். ஆனால் இந்த தபஸ் என்பது, இப்பொழுது பொருளில்லாத சொல்லாகி விட்டது. ஆத்ம சக்திக்கு வேர்கள் போன்றவை, ஒழுங்குக்குட்பட்ட மனமும் சன்மார்க்க

வாழ்க்கையும். அந்த வேர்கள் இப்பொழுது உலர்ந்து வருகின்றன. நமக்கு ஆத்ம சக்தி எப்படி ஏற்படும்?

பிருஹதாரண்ய உபநிஷத்தில் ஒரு கதை சொல்லப்படுகிறது. ஒரு சமயம் தேவர்கள், அசுரர்கள், மனுஷ்யர்கள் ஆகிய மூவகையினரும் பிரம்மாவிடம் சென்று, தாங்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டுமென்பதைப்பற்றி உபதேசிக்குமாறு கேட்டார்கள். அப்பொழுது தா - தா - தா என்று இடி இடித்தது. பிரும்மாவின் உபதேசம் இந்தச் சப்தத்தில் அடங்கியிருப்பதாக மூவகையினரும் தெரிந்து கொண்டார்கள். எப்படியென்றால், தேவர்கள் தா என்ற அக்ஷரத்திற்கு தாம்யத, அதாவது தாங்கள் நிதானமாக - அளவோடு - இருக்க வேண்டுமென்று பொருள் கொண்டார்கள். அப்படியே அசுரர்கள், தாங்கள் எல்லோரிடத்திலும் தயை காட்ட வேண்டுமென்று பொருள் கொண்டார்கள். மனுஷ்யர்கள் தத்தம் என்ற அட்சரத்திற்கு தாங்கள் தானம் செய்யவேண்டுமென்று பொருள் கொண்டார்கள்.

பொதுவாகவே பிரதியொரு மஷ்னுயனிடத்திலும், மனுஷத் தன்மையோடு தெய்வத் தன்மையும், அசுரத் தன்மையும் கலந்திருக்கின்றது. அதாவது, அவன் இன்ப நுகர்ச்சி, பிறருக்குத் தீங்கிழைத்தல், பேராசை கொள்ளுதல் ஆகிய இந்த மூன்று குறைபாடுகளையும் களைந்தெறிய வேண்டுமானால், அவன். நிதான முடையவனாகவும், தானம் செய்கிறவனாகவும் முறையே இருக்க வேண்டும். இது தான் இந்தக் கதையின் தாத்பர்யம். எந்த ஒரு நாகரிக பரம்பரையும், நிதானம், தயை, தானம் ஆகியவற்றோடு, சத்தியம், பிறர் பொருள் வெளவாமை, அஹிம்சை ஆகியவற்றைப் பிரதானமாகக் கொண்டிருந்தால் தான் மதிப்புப் பெற்றிருக்கும். சிறப்பாக பாரத நாட்டின் கலாசாரத்திற்கும், நாகரிக பரம்பரைக்கும், இந்தச் சேர்க்கை அவசியம். இந்தச் சேர்க்கை, நம்மில் ஒவ்வொருவரிடத்திலும் இடம் பெறுவதற்கு நாம் எந்த அளவுக்கு முயற்சி செய்கிறோமோ, அந்த அளவுக்கு நம்முடைய பாரத சமுதாயத்தை அதற்கேற்பட்டிருக்கிற கலாசார நெருக்கடியிலிருந்து மீட்டவர்களாவோம். ஸ்ரீ சங்கர பகவத் பாதாள் ஷட்பதி ஸ்தோத்திரத்தில், அருளியிருக்கிறபடி பகவானை நோக்கி நாம் அனைவரும் பின் வரும் பிரார்த்தனையைச் செய்வோமாக: -

"பகவானே, என்னிடமுள்ள தன்னடக்கமின்மையை நீக்கு; என்னுடைய மனம் கட்டுப்பட்டிருக்கும்படி செய். இந்திரிய சுகங்களிலிருந்து என்னை விடுதலை செய். எல்லா ஜீவராசிகளிடத்திலும், அன்பு செலுத்துகிற மாதிரி என் இதயத்தை விலாலப் படுத்து; சம்சார சாகரத்தைக் கடக்க எனக்குத் துணை செய்".